22nd September 1958]

SRI S. LAZAR: இந்தக் காரணத்தைக்கொண்டு நீடிக்க உத்தேசம் இல்லை என்றாலும், எந்தக் காரணத்திற்காக உயர்நீதி மன்றத்திலுள்ள நீதிபதிகளுக்கு நீடிப்புக் கொடுக்கப்படுகிறதோ அந்தக் காரணத்தின் அடிப்படையில் மற்றவர்களுக்கும் கொடுக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: உயர்நீதி மன்றத்தில் நீதிபதிகளாக இருப்பவர்கள் 10, 12 பேர். இப்பொழுது வயதானவர்களுக்குத் தொடர்ந்து வேலை நீடிப்புக் கொடுப்பது முக்கியமல்ல. இளைஞர்கள், அதாவது புதிதாக வேலைக்கு வருகிறவர்களுக்கு வேலை கொடுப்பது முக்கியம். 60 வயதாக நீடித்தால் இளைஞர்களுக்கு வேலை கொடுக்கக்கூடிய சந்தர்ப்பம் மிகவும் குறைந்துவிடும். ஆகவே 55 வயது என்றிருப்பதுதான் சரி என்று சர்க்கார் கருதுகிறார்கள்.

SRI A. GOVINDASAMY: இங்கே ஆட்சிப் பொறுப்பு ஏற்று நடத்துகிற அமைச்சர்கள், 60-வயதுக்கு மேற்பட்டவர்கள், தகுதியுள்ளவர்களாக இருக்கும்பொழுது, மற்றவர்களை ஏன் அவ்வாறு வேலை செய்வதற்கு அனுமதிக்கக்கூடாது?

THE HON. SRI C. SUBRAMANIAM: மந்திரிகளுடைய தகுதி வயதைப் பொறுத்து நிர்ணயிக்கக் கூடியதல்ல. இந்த சபை ஒப்புக்கொள்வதைப் பொறுத்திருக்கிறது. இந்த சபை பார்த்து 60 வயது இருக்கிறவர்கள் இருக்கக்கூடாது என்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றினால், அது நிறைவேற்றப்படும். இந் சபைக்குத அதிகாரம் இருக்கிறதே தவிர, சர்க்காருக்கு கிடையாது.

SRI S. NAGARAJA MONIGAR: நாடு பெருவாரியாக முன்னேற்றம் அடையவேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்திலே, இளைஞர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும் என்ற காரணத்திற்காக, அனுபவம் முதிர்ந்தவர்களையும், தேக திடகாத்திரம் உள்ளவர்களையும் பயன்படுத்தாமல் விட்டுவிடுவது சரியாகுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: வேறு துறைகளிலே அவர்களுடைய அனுபவத்தையும், அறிவையும், தகுதியையும் உபயோகித்துக்கொள்ளலாம். வேலையிலிருந்து ஓய்வு எடுக்கக்கூடிய உத்தியோகஸ்தர்கள் திடகாத்திரமாக இருந்தால், கிராமப் புறங்களிலே வேலை செய்வதற்கு போதிய அவகாசங்கள் இருக்கின்றன. அதைப் பயன்படுத்திக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

*Madras Educational Rules*

*403 Q.—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether as per paragraph 2 of G.O. No. 388, dated 4th March 1958 of the Education Department, necessary amendments have been made to the Madras Educational Rules;

(b) if not, whether the same will be made before the commencement of the next academic year; and

(c) if already made, whether a copy of the same will be placed on the table of the House?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) & (b) No, Sir. The question of formally amending the Madras Educational Rules in this respect is under consideration.

(b) Does not arise.

SRI S. LAZAR : அரசாங்கம் உத்திரவு ஏற்கெனவே அனுப்பியிருந்த போதிலும்கூட ஒரு சில பள்ளிகளிலே இந்தச் சலுகை மறுக்கப்படுவது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? இந்தத் திருத்ததைதை சீக்கிரமே அமுலுக்குக் கொண்டுவருவதற்கான முயற்சியை சர்க்கார் எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது எங்கே அமல் நடத்தப்படவில்லை என்பதைப்பற்றி தகவல் கொடுத்தால் சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்.

*Rajaji Tuberculosis Sanatorium*

* 404 *Q*.—Sri N. K. PALANISAMI (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received the resolution passed by the Tiruchirappalli District Planning Board at its meeting held on 25th April 1958, regarding the taking over of the Rajaji Tuberculosis Sanatorium; and

(*b*) the decision taken by the Government on that proposal?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*House-sites for Harijans*

* 405 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைக்கட்டு நிலங்கள் கிரயத்துக்கு வாங்கி இலவசமாக வழங்குவதற்காக 1958-59-ம் ஆண்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையிலிருந்து ஒவ்வொரு ஜில்லாவுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே சென்னை ராஜ்யத்திலிருக்கும் 105 கிராமங்களிலே ஹரிஜனங்களுக்கு வீடு மனைக்கட்டு நிலங்கள் வாங்குவதற்காக மத்திய சர்க்கார் 1 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது என்றும், மேற்கொண்டு தொகை தேவைப்படுமானால், மற்ற ராஜ்யங்களில் செலவழிக்கப்படாமல் மீதியிருப்பதை சென்னை அரசாங்கத்துக்கு கொடுப்பதாகவும், 16-5-58-ல் சென்னைக்கு விஜயம் செய்த மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ கே. வி. ரெட்டி அவர்கள் தெரிவித்தார்கள். இந்திய சர்க்கார் ஒவ்வொரு ராஜ்யத்திலும் வீடு மனைக் கட்டுகள் வாங்குவதற்கு எவ்வளவு தொகை தேவை என்ற ரிப்போர்ட்டை இந்த வருஷம் அனுப்புவதாகத் தெரிவித்திருக்கிறார்கள். இது சம்பந்தமாக நமது ராஜ்யத்திலே ஹரிஜனங்களுக்கு வீடு மனைக்கட்டுகள் வாங்குவதற்கு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்லும் விவரம் எனக்குத் தெரியாது. இந்த ஸ்டேட்மெண்டில் கொடுக்கப்பட்டபடி, மனைக்கட்டுகள் வாங்குவதற்காக நமது ராஜ்ய சர்க்கார் 4 லட்சம் ரூபாயும், மத்திய மாகாண சர்க்கார் திட்டப்படி 5,35,000 ரூபாயும் செலவழிக்கப் போகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

[a] Printed as Appendix III on page 488 infra.